9th March 1961]

புனிதத் தன்மை கெடாமல் சுத்தமாக இருக்கும்படி புத்திமதி கூறிச் சென்றதை சர்க்கார் பரிசிலித்ததா? இதற்கு சில ஜட்ஜு களும் சில வக்கீல்களும் தான் காரணம் என்று கூறப்படுவது சர்க்காருக்குத் தெரியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சுப்ரீம் கோர்ட்சிப் ஜஸ்டிஸ் ஒன்றும் அப்படிச் சொல்லவில்லை. அம்மாதிரி தவருக ஒன்றும் சொல்லக்கூடாது.

MR. SPEAKER: Questions should not contain insinuations.

*Hospital (Baratharami)*

* 698 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குடியாத்தம் தாலூகா, பரதராமி கிராமத்தில் ஆஸ்பத்திரி ஏற்கெனவே இருந்து இப்போது இல்லாதிருப்பது சர்க்காருக்குத் தெரியுமா?

(இ) மீண்டும் ஆஸ்பத்திரியை பழையபடி ஆரம்பிக்கவும், டாக்டரை நியமிக்கவும் உத்தேசமுண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) & (b) Yes, Sir.

MR. SPEAKER: அடுத்த கேள்வி, கேள்வி நம்பர் 699.

(ஸ்ரீ வி. கே. கோதண்டராமன் எழுந்திருந்தார்)

MR. SPEAKER: கனம் அங்கத்தினர் அவர்கள் முன்னுலேயே எழுந்திருக்கவில்லையே, நான் என்ன செய்கிறது? அதனுல்தான் அடுத்த கேள்வி என்று சொன்னேன். நான் அன்றே சொன்னேன், கேள்வி நம்பரைக் கூப்பிடுகிறபோது தயவு செய்து அந்த அங்கத்தினர் நின்று "கேள்வியை கேட்கிறேன்" என்று சொல்ல வேண்டும். பிறகு உப கேள்வி கேட்கவேண்டுமென்ருல் உடனே நான் பார்க்கும்படி கையைத் தூக்கவேண்டும். கனம் அங்கத்தினர் கையை தூக்கவில்லை. "ஆல்ரைட்" இனி மேல் ஜாக்கிரதையாக இருங்கள். இப்பொழுது கூப்பிடுகிறேன். உபகேள்வி போடலாம்.

SRI V. K. KOTHANDARAMAN: ஆந்திராவிலிருந்து நமது ராஜ்யத்திலே சேர்ந்த பகுதிகளில் விசேஷ கவனம் செலுத்தப் படும் என்று நமது சர்க்கார் சொன்னுர்கள். 15,000 மக்கள் கொண்ட இந்த வட்டாரத்தில் பரதராமி கிராமத்தில் ஏற்கனவே ஆஸ்பத்திரி இருந்தது. இப்பொழுது அங்கு கட்டிடம்தான் இருக்கிறது. அங்கு ஆஸ்பத்திரி கிடையாது. மெட்டர்னிட்டி சென்டரும் கிடையாது என்ற காரணத்தினுல் 10 மைல், 15 மைல் தூரத்திற்கு போகக்கூடிய அளவில் மக்கள் கஷ்டப்படுகிருர்கள்,

[9th March 1961

என்பது கனம் அமைச்சர் அவர்களுக்கு தெரியுமா? ஆகவே, அங்கு ஆஸ்பத்திரியும், மெட்டர்னிட்டி சென்டரும் துரிதமாக அமைக்க ஏற்பாடு செய்யப்படுமோ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த ஆஸ்பத்திரி ஆந்திரா பிரிந்த பிறகு சித்தூர் ஜில்லா போர்டினுல் நடத்தப்பட்டு வந்தது. படாஸ்கர் அவார்டுக்குப் பிறகு நமக்கு வந்தது அது. அதை வட ஆற்காடு ஜில்லா போர்டு நடத்தவேண்டும். அதை நடத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

*Pension*

* 699 *Q*.—SRI T. S. RAMASWAMI
SRI S. M. ANNAMALAI } :Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have taken any decision to old age pension; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) No Sir.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI: ஒரு சில மாநிலங்களில் இப்படி 70 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு பென்ஷன் தருவதாக நிர்ணயித்திருக்கிறுர்களே? அம்மாதிரி ஏன் நம்முடைய மாநிலத்திலும் நடத்துவதற்கு சர்க்கார் முயற்சி எடுக்கக்கூடாது?

THE HON. SRI C. SUBRAMANIAM: மற்ற மாநிலங்களில் செய்வதையெல்லாம் நாமும் செய்யவேண்டுமென்ற அவசியம் இல்லே. இங்கு வேறு சில முக்கியமான பணிகளை நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறேம். அந்தப் பணிகள் மற்ற மாநிலங்களில் நடப்பதில்லே. ஆகையினுல் எது உசிதம் என்று தோன்றுகிறதோ அதெல்லாம் எடுத்துக்கொள்ளப்படும்.

SRI T. S. RAMASWAMI: வயது வந்தவர்களுக்கு பென்ஷன் கொடுத்து உதவவேண்டும் என்று முடிவு எடுக்கபபோவதாக முதல் அமைச்சர் அவர்கள் சொன்னதாக பத்திரிகையில் வந்தது. அது உண்மையா அல்லது கயிறு திரிப்பு தானு?

THE HON. SRI C. SUBRAMANIAM: அப்படிப் பார்த்ததாக எனக்கு ஞாபகம் இல்லே.

SRI P. S. CHINNADURAI: இவ்வாறு மூப்பு அடைந்தவர்களுக்கும் வேறு உதவியற்ற பெரியவர்களுக்கும் 60 வயதுக்கு மேலே ரூ. 20 கொடுப்பது என்ற அளவிலே உதவி செய்வதாக இருந்தால், எவ்வளவு தொகை அதற்காக ஆகும் என்றுவது சர்க்கார் ஆலோசித்துப் பார்த்திருக்கிறுர்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதைப்பற்றி ஆலோசிக்கவில்லே.